16

# வழக்கு

'இப்ப என்ன?' என்பது போல் கௌரி நிமிர்ந்து பார்த்தாள். கிருஷ்ணனின் முகத்தில் இருக்கும் கோபப் பளபளப்புக்குக் காரணம் புரியவில்லை - என்றுமே புரிந்ததில்லை! என்ன காரணம் இருக்கும் என்று மண்டையைக் குடைந்து கொண்டு நிற்பதில் ஏதும் லாபமில்லை என்கிற பிரக்ஞை ஏற்பட்டு வெகு நாட்களாகி விட்டன. நிமிஷத்துக்கு நிமிஷம் காரணம் ஜனிக்கும், மாறும், அது ஒரு சுழற்சி. அதிலிருந்து தப்புவதற்கு மார்க்கவில்லை.

கிருஷ்ணனின் கோபத்தில் வார்த்தைகள் வெடிக்காது. அசிங்கமாக ஒரு சொல் தெறிக்காது. அவருக்குக் கோபம் என்று வெளிப் பேருக்குத் தெரியக் கூடத் தெரியாது. இலைகளின் சலசலப்பில், காற்றின் வீச்சில் பிராணிகள் உஷாராவது போல் அவளுக்குப் புரியும் - அவரது நடையில், எங்கோ பார்க்கும் பார்வையில், கை விரல் அசைவின் நிராகரிப்பில்.

டிரைவர் முத்துச்சாமி உள்ளே நுழைந்து அவர் தயாராக மாடிப் படிக்கட்டில் வைத்திருந்த ஸூட்கேஸை எடுத்துக் கொண்டு போனான்.

காலை ஆகாரம் செய்து கொண்டிருந்த அவர் கவனத்தில் படும்படி கௌரி சட்டினிக் கிண்ணத்தை நகர்த்தி வைத்தாள்.

''இதெல்லாம் நான் பார்த்துக்கறேன்'' என்றார் கிருஷ்ணன் கடுமையுடன். ''மாலினியை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கோ. கார்த்தாலே டெம்பரேச்சர் செக் பண்ணியா?''

''ஆமாம். நூறு இருந்தது.''

''ஃப்ளூதான். மெள்ளக் குறைஞ்சிடும். ஆனா பலவீனம் ரொம்ப இருக்கும். வேளைக்கு வேளை ஜூஸ் எல்லாம் கொடுக்கணும்.''

''கொடுக்கறேனே!''

''உனக்கு எல்லாம் தெரியும்தான். இருந்தாலும் நா சொல்றதைக் கேட்டுக்கோ.''

அவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள் - நா காக்க.

''நான் திரும்ப ரெண்டு நாளாகும். ஜுரம் நிக்கலேன்னா டாக்டர் சங்கரனைக் கூப்பிடு''

''சரி.''

''இப்ப வர்ற வைரஸ் ஜுரமெல்லாம் பயங்கரமாத்தான் வருது'' என்றார் தமக்குள் பேசிக் கொள்பவரைப் போல. ''பிள்ளை வீட்டுக்காரங்க பெண் பார்க்க வர்ற சமயத்திலே இவ சோர்ந்து தெரியப் போறாளேன்னு யோசனையா இருக்கு.''

''அதுக்கும் இன்னும் இருபது நாளிருக்கே அதுக்குள்ளே உடம்பு தேறிடும்.''

''அதுக்கு நீ பொறுப்பு'' என்றார் அவர், கட்டளையிடுபவர் போல. ''ஜுரம் வந்த நாக்கு செத்திருக்கும். அதுக்குத் தகுந்தபடி செஞ்சு கொடு.''

''சரி'' என்றாள் அவள் சலனமில்லாமல்.

''நீங்க கவலைப்படாம போயிட்டு வாங்கோ!''

''மாலினியைத் தனியா விட்டுட்டு எங்கேயும் போயிடாதே!''

''நான் எதுக்குப் போறேன்?''

''பஜனைன்னு யாராவது கூப்பிட்டா போயிடுவே!''

''குழந்தை ஜுரத்திலே படுத்திருக்கும் போதா?''

அதற்கு ஏதும் பதில் சொல்லாமல் அவர் எழுந்து வாஷ் பேசினில் கையைக் கழுவி, வேகமாகத் துண்டில் துடைத்தார். சோபாவின் மேல் வைத்திருந்த ஆபீஸ் அட்டாச்சியைத் தூக்கியபடி அவளைப் பார்த்து, ''எனக்கு ஏதாவது தகவல் அனுப்பணும்னா ஆபீசுக்குத் தெரிவி'' என்றார்.

''சரி.''

திரும்பியே பார்க்காமல், டிரைவர் திறந்து வைத்துக் காத்திருந்த வண்டிக்குள் உட்கார்ந்த கிருஷ்ணனின் முகத்தில் சிந்தனைக் கோடுகள் இருந்தன. 'போய் வருகிறேன்' என்கிற சங்கேதப் பார்வைக்காகக் காத்திருந்து - வராமல், ஏமாற்றத்துடன் அவள் உள்ளே திரும்பினாள்.

மாலினி தூங்கிக் கொண்டிருந்தாள். மூன்று நாள் ஜுரத்தில் கழுத்துப் பட்டை எலும்பு துருத்திக் கொண்டு நின்றது. முகத்தின் வெளுப்பு நீர்த்திருந்தது. நெற்றியில் மென்மையாகக் கையை வைத்துப் பார்த்தாள். ஜுரம் குறைந்திருந்தது. மாலினி கண்களைத் திறந்தாள்.

கௌரி இலேசாகப் புன்னகை செய்தாள்.

''ஏதாவது சாப்பிடறியா மாலினி?''

''வேண்டாம்'' என்றாள் மாலினி. ''அப்பா போயாச்சா?''

''ஆச்சு. ஹார்லிக்ஸோ ஜூஸோ கொண்டு வரேனே!''

''வேண்டாம்மா. குடிக்கணும் போல இல்லே.''

''கொஞ்சம் போல ஜூஸ் தரேன். குடி. இல்லேன்னா கரைச்சு ரஸஞ்சாதம்...''

''அம்மா ப்ளீஸ்!''

''நீ இப்படிப் பிடிவாதம் பிடிக்கறே, அப்புறம் உங்கப்பா என்னை பிடிச்சு உலுக்கறார்.''

மாலினியின் பார்வை ஒரு வினாடி அவளுடைய பார்வையுடன் கோத்து நின்றது. தர்மா மீட்டரை எடுக்கும் சாக்கில் கௌரி பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

''முதல்லே எனக்குக் குளிக்கணும். உடம்பு ஒரேயடியாக கசகசத்துப் போயிருக்கு.''

''குளிக்கிறதா?'' என்றாள் கௌரி அதிர்ந்து. ''ஜுரம் இன்னும் நார்மலுக்கு வரல்லே! துடைச்சு வேணா விடறேன். இப்ப ஜுரம் எத்தனைன்னு பார்க்கலாம்.''

''நார்மல்னா குளிப்பேன்!''

''குழந்தை மாதிரி படுத்தாதேடி மாலினி! பத்து நாள்லே பிள்ளை வீட்டுக்காரங்க வர்றக்குள்ளே உன்னைச் சரியாக்கணும்.''

தர்மா மீட்டர் 99தைக் காட்டிற்று.

''மத்தியானம் நார்மல் வந்துடும். அப்ப குளிப்பேன்.''

''இதைப் பார். ரெண்டு நாளைக்குப் பல்லைக் கடிச்சிண்டு இரு. உங்கப்பா வர்ற வரைக்கும். ஒண்ணு கிடக்க ஒண்ணு கோளாறாகிப் போச்சுன்னா நான்தான் அவர்கிட்டப் பேச்சுக் கேக்கணும்.''

''எனக்கு என்ன ஆயிடுமோங்கற கவலையை விட அப்பா என்ன சொல்வாரோங்கிற பயம்தான் உனக்கு அதிகமா இருக்கும் போல இருக்கு....''

கௌரி சரேலென்று அவளைப் பார்த்தாள். மாலினி கண்களை மூடிக் கொண்டாள் சோர்வுடன்.

''ஸாரி!''

மூட்டம் படர்ந்து ஸ்தம்பித்து நின்ற ஒரு வினாடிக்குப் பிறகு ''ஸ்பான்ஜ் பாத் பண்ணி விடறேன்'' என்றாள் கௌரி இயல்பாக. ''பவுடர் போட்டு வேற டிரஸ் மாத்தினா கொஞ்சம் ஃப்ரெஷ்ஷா இருக்கும்.''

கீஸரின் ஸ்விட்சைப் போட்டு, சூடு பதம் பார்த்து, பிளாஸ்டிக் பேஸனில் நீர் நிரப்பி, சோப்பும், துண்டும், டால்கம் பவுடரும் துவைத்த உடுப்புகளும் எடுத்துப் படுக்கைக்கு அருகில் வைத்துத் தேர்ந்த நர்ஸைப் போல் கவனமாக உடம்பைத் துடைக்கும் போது கிருஷ்ணனின் நினைவு எட்டிப் பார்த்தது.

''சீக்கிரம் துடைம்மா, குளிருது!''

அவள் பரபரவென்று துடைத்துப் பவுடரைப் பூசினாள். வேறு உடைகளை அணிவித்து 'பம்'மென்று பரந்த குட்டை மயிரை அதிராமல் பிரஷ் செய்தாள்.

''கல்யாணம் ஆனப்புறம் ஜுரம் வந்தா இப்படியெல்லாம் எனக்கு யார் செய்வா?''

கௌரி சிரித்தாள்.

''உன் புருஷன் செய்வான்.''

''செய்வானா? அப்பா உனக்குச் செஞ்சு நான் பார்த்ததில்லே.''

அழுக்குத் துணிகளை அள்ளும் சாக்கில் கௌரி குனிந்தாள். இடுப்பில் லேசாக வலித்தது.

''அம்மா ஸாரி.''

''எதுக்கு?''

''உனக்கு என்னைப் பத்திக் கவலையில்லேன்னு சொன்னதுக்கு.''

மெல்லிய புன்னகை கௌரியின் உதடுகளில் கோடிட்டது.

''இப்ப என்ன சாப்பிடறே சொல்லு'' என்றாள் பிரகாசமாய்.

மாலினியிடமிருந்து பதில் வரவில்லை. கண்ணை மூடிப் படுத்திருந்தாள், கழுத்து வரைப் போர்வையைப் போர்த்தி, ''சூடா ரஸஞ்சாதம் கரைச்சுண்டு வரேன்'' என்றாள்.

''கூட சிப்ஸ் வேணும்.''

கௌரி சிரித்துக் கொண்டே சமையல் கட்டிற்கு நகர்ந்தாள்.

முதலில் பிணக்கு செய்தாலும் வாய்க்குப் பிடித்தது தான் மாலினி சாப்பிட்டாள்.

''அப்பாடா பிழைச்சேன்!'' என்றாள் கௌரி நிம்மதியுடன்.

மாலினி வேறு எதையோ நினைத்துப் புன்னகை செய்வது போலிருந்தது. கட்டில் பக்கத்து மேஜை மேல் இருந்த வாக்மென்னை எடுத்துக் காதில் குழாய் பொருத்தியபடி, ''நீயும் போய்ச் சாப்பிடும்மா நான் பாட்டுக் கேக்கறேன்'' என்றாள்.

''சரி. ஏதாவது வேணும்னா கூப்பிடு.''

காலையில் இருந்த டென்ஷன் இப்பொழுது இல்லை. மனசு லேசாகிப் போயிருந்தது. பசித்துச் சாப்பிடத் தோன்றிற்று.

ரசம் வார்த்துக் கொள்ளும் போது வாந்தி எடுக்கும் ஓசை கேட்டது. எச்சில் கையை உதறிக் கொண்டு கௌரி ஓடினாள்.

மாலினி வாஷ்பேஸனில் முகத்தைக் கவிழ்த்து வாந்தி எடுத்துக் கொண்டிருந்தாள். கௌரி சட்டென்று அவள் தோளைப் பற்றிக் கொப்புளிக்க நீர் கொடுத்தாள். உள்ளே சென்றிருந்ததெல்லாம் சீறிக் கொண்டு வெளியே வந்திருந்தது.

''பிடிச்சுத்தானே சாப்பிட்டே? வாந்தி எடுக்க வர்றதுன்னே நீ சொல்லலியே?'' என்றாள் யோசனையுடன்.

சோர்ந்து கண்ணை மூடிப் படுத்து விட்ட மாலினியைப் பார்க்கக் கவலையாக இருந்தது. இப்போது ஜுரமேதுமில்லை. உடம்பைத் துடைத்தது பலவீனப்படுத்தி விட்டதா?

''பேசாம தூங்கு மாலினி. ரெஸ்ட் எடுத்துண்டா சரியாப் போயிடும். கொஞ்ச நேரம் கழிச்சு ஜூஸ் தரேன்.''

ஜூஸும் வெளியில் வந்து விட்டது. இப்பொழுது உடம்பு கதகதவென்று சுட்டது. 101 டிகிரி ஜுரம் என்று தர்மா மீட்டர் காட்டிற்று. கப்பென்று அடிவயிற்றை ஒரு திகில் கவ்விக் கொண்டது கௌரிக்கு. ஈசுவரா, அவர் வர்றதுக்குள்ளே உடம்பு சரியாயிடணும்.

டாக்டருக்கு போன் செய்தாள். அவர் வீட்டில் இல்லை. அவர் மீண்டும் கிடைப்பதற்குள் இருள் விரிந்து விட்டது. மாலினி அதற்குள் நான்கு முறை வாந்தி எடுத்து விட்டாள், ஜுரம் 103க்கு ஏறிற்று. அலை அலையாகத் திகில் நெஞ்சு வரை பரவிற்று. ஈசுவரா ஈசுவரா என்பதைத் தவிர மூளை இயங்க மறுத்தது.

விவரம் சொன்னதும் ''கவலைப்படாதீங்க'' என்றார் டாக்டர் சங்கரன் லேசாக. ''இந்த ஜுரம் இப்படித்தான். வாந்திக்கு லார்கெக்டைல் கொடுங்க, நின்னுடும். ஜுரத்துக்கு நான் கொடுத் திருக்கிற மருந்தை நிறுத்தாம கொடுங்க.''

''நீங்க ஒரு நடை வந்து பாருங்க டாக்டர். எனக்குக் கவலையாயிருக்கு.''

''நான் அவசரமா ஒரு ஆபரேஷனுக்குப் போனும்மா. காலையிலே வந்து பார்க்கறேன். லார்கெக்டைல்லே வாந்தி நின்னுடும். நிக்கல்லேன்னா மறுபடி பாதி மாத்திரை கொடுங்க.''

டாக்டரின் அவசரம் குரலில் தொனித்தது. நம்மை முட்டாள் என்று நினைக்கிறார் என்று கூச்சம் ஏற்பட்டது. மருந்து வாங்கி வர வேண்டும். கடை, தெருக் கோடியில் தான் இருந்தது. மாலினியைத் தனியாக விட்டு விட்டுப் போகப் பயமாக இருந்தது. வேறு வழி யில்லை என்ற உணர்வில், மாலினிக்கு அருகில், வாந்தி வந்தால் எடுக்கச் சௌர்யமாய் ஒரு சின்ன பேஸினும் குவளையில் நீரும் துடைத்துக் கொள்ள டவலும் வைத்து, ''அஞ்சே நிமிஷத்திலே வரேன் மாலினி'' என்று வீட்டைப் பூட்டி ஓட்டமும் நடையுமாக மருந்துக் கடைக்குச் சென்று மூச்சிரைக்க நின்ற போது, மருந்துக் கடை இளைஞன் விநோதமாகப் பார்த்தான்.

''பெண்ணுக்கு ஜுரம்பா. ஒரே வாந்தியெடுக்கறா. இவங்க வேற ஊர்லே இல்லே.''

''இப்ப வர்ற ஃப்ளு அப்படித்தான் பயமுறுத்தும். அப்புறம் சரியாப் போயிரும்.''

சரியாப் போயிடணும். பகவானே, இவர் வர்றதுக்குள்ளே சரியாயிடணும்.

பணத்தைக் கொடுக்கும் போது பர்சிலிருந்து நாணயங்கள் எல்லாம் சிதறி விழுந்தன.

''எதுக்கும்மா இப்படிப் பதற்றப்படறீங்க?''

அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு வீட்டிற்கு விரைந்தாள். மறுபடியும் மாலினி வாந்தி எடுத்திருந்தாள். பூஜையறையிலிருந்து விபூதியைக் கொண்டு வந்து அவள் நெற்றியில் இடும்போது விரல் நடுங்கிற்று. கண்ணில் நீர் துளிர்த்தது.

''மாலினி இதைச் சாப்பிடு. வாந்தி நிக்கும்.''

நிற்கவில்லை. ஒரு சொட்டு நீர் உள்ளே தங்கவில்லை. கொடுக்கக் கொடுக்க இரட்டிப்பாய் வெளியே சீறிக் கொண்டு வந்தது. விலா எலும்பு இழுத்துக் கொண்டது. டாக்டர் கிடைக்க வில்லை. மார்க்கம் புலப்படவில்லை. கிருஷ்ணனுக்குத் தகவல் தெரிவிக்க இனிமேல் முடியாது. அலுவலகம் மூடி எவ்வளவோ நேரமாகி யிருக்கும். மாலினி கண்ணே திறக்காமல் கூப்பிட்ட குரலுக்குக் கூட ஏன் என்று கேட்கும் சக்தியில்லாமல் களைத்துக் கிடந்தாள்.

இரவு நீள நீள, அவளுக்கே தூக்கமா, மயக்கமா என்று புரியாத நினைவும் விழிப்புமாக இருந்தது.

''குழந்தைக்கு மறுபடி எப்படி ஜுரம் வந்தது? குளிப் பாட்டினியா? காத்துலே அழைச்சிண்டு போனியா? கண்டதைத் திங்கக் குடுத்தியா?''

''குழந்தைன்னா ஜுரம் வராதா?''

''வரும். நின்னப்புறம் மறுபடி வந்ததுன்னா அஜாக்கிரதைன்னு அர்த்தம். கவனிப்பு சரியில்லேன்னு அர்த்தம்.''

ஈசுவரா. இந்த வாந்தி நிக்கணும். அவர் வர்றதுக்குள்ளே உடம்பு சரியாயிடணும். விபரீதமா ஏதும் ஆயிடக் கூடாது.

நினைப்பே உடம்பை உலுக்கிற்று. அப்படிக் கூட ஆகுமா? சாதாண ஃப்ளு ஜுரம் விபரீதமாகப் போகுமா? அந்த மருந்துக் கடைக்காரன் சொன்னது போல இப்படித்தான் பயமுறுத்தும். நான் அதிகமாத்தான் படபடக்கறேன்.

மாலினியிடமிருந்து பேச்சே இல்லை. இப்போது வாந்தி இல்லை. நல்ல ஜுரம் அடித்தது. மயக்கமா தூக்கமா என்று புரிய வில்லை, அசையாமல் கிடந்தாள். ஒரு போதுக்குள் என்ன நேர்ந்த விட்டது?

''உன் பொறுப்பு!''

-குரல் உக்கிரமாகி நாடி நரம்பையெல்லாம் ஊடுருவிற்று.

இரவு இரண்டு மணி என்கிற தயக்கத்தை மீறிய கலவரத்துடன் டாக்டரின் வீட்டுக்கு டெலிபோன் செய்த போது டாக்டரின் மனைவியின் பதிலில் எரிச்சல் தெரிந்தது.

''இப்பத்தான் அவங்க வீட்டுக்கு வந்து படுத்தாங்க. நீங்க போன் பண்ணினா காலையிலே எட்டு மணிக்கு வர்றதா தெரிவிக்கச் சொன்னாங்க.''

''பொண்ணு கண்ணைத் தொறக்காத படுத்திருக்காம்மா. கவலையாயிருக்கும்மா!''

''காலையிலே வந்து பார்ப்பாங்க.''

டாக்டரின் மனைவி போனை வைத்து விட்டாள். இப்பொழுது என்ன செய்வது? வேற எந்த டாக்டரையும் தெரியாது. ஆஸ்பத் திரிக்கு அழைத்துப் போவதா? எப்படி? எந்த ஆஸ்பத்திரி?

அழைத்துப் போகும் அளவுக்கு நிலைமை மோசமா? ஒன்றுமே புரிய வில்லை. படிப்பறிவில்லாத மூடம் போல உணர்வேற்பட்டது.

இரவு முழுவதும் பதைத்துப் பிரார்த்தித்துத் தூங்காமல் உட்கார்ந்தபடியே கழித்துக் காலையில் வேலைக்காரி கதவைத் தட்டும் போது தூக்கம் கண்களை மூடியிருந்தது.

''என்னம்மா இப்பத்தான் எழுந்திருச்சீங்களா'' என்ற கேள்விக்குப் பதில் சொல்லக் கூட முடியாமல் உடம்பு அசத்திற்று.

மாலினிக்கு இன்னும் நல்ல ஜுரம் இருந்தது. கூப்பிட்டால் பதில் வரவில்லை.

டாக்டருக்கு போன் செய்ய அவள் விரையும்போது அவரே வந்தார் - நல்ல வேளையாய். மாலினியைப் பார்த்ததும் அவர் முகம் மாறிப் போனதை அவள் கலவரத்துடன் கவனித்தாள்.

''உடனே ஆஸ்பத்திரிக்கு அழைச்சிட்டுப் போகணும்மா.''

''ஏன் டாக்டர்?'' என்றாள் அதிர்ந்து.

''உடம்பிலே தண்ணி வத்திட்டதும்மா. டீ - ஹைட்ரேஷன் ஆயிட்டது. ட்ரிப்பிலே வைக்கணும்.''

அவளுக்கு அழுகை வெடித்தது.

''அதுக்குத்தான் நான் ராத்திரி அத்தனை பதற்றப்பட்டேன் டாக்டர்.''

''ஏம்மா நான் சொன்ன மாத்திரையைக் கொடுத்தீங்களா?''

''கொடுக்காம?'' என்றாள் அவள் வேகமாக. ''அவசர அவசரமா மருந்துக் கடைக்கு ஓடிப் போய்.... அவங்க வேற ஊர்லே இல்லே...''

கோர்வையாகப் பேச முடியாமல் பீதியில் வெடித்த கற்பனைச் சூழலில் சிக்கிக்கொண்டு அவள் அழ ஆரம்பித்தாள்.

''கவலைப்படாதீங்க. நான்தான் வந்துட்டேன் இல்லே. நானே என் காரிலே கூட்டிட்டுப் போறேன்.''

''சரியாயிடுவாளா டாக்டர்?''

''சரியாயிடுவாம்மா. எதுக்கு இத்தனை பயப்படறீங்க?''

மாலினி இரவு தூங்கவில்லை; மயக்கத்தில் இருந்தாள் என்று அப்பொழுதான் புரிந்தது. அடி வயிறு பந்தாகச் சுருண்டது. இது என்ன சோதனை! ஆஸ்பத்திரிக்குச் செல்லும் வழியெல்லாம் டாக்டரும் பேசவில்லை. மடியில் கண் விழிக்காமல் படுத்திருந்த மாலினியின் கன்னங்களை அவள் பித்துபிடித்தவள் போல் வருடியபடி கண்ணீர் விட்டாள். 'என்னை ஏமாத்திடாதேடி கொழந்தே....'

ஆஸ்பத்திரி கவனிப்பார் இல்லாமல் கிடந்தது. ஸ்டிரைக் என்றார்கள். சில டாக்டர்கள் மட்டும் வளைய வந்து கொண்டிருந் தார்கள். காலியாக இருந்த ஒரு படுக்கையில் மாலினியைக் கிடத்தினார்கள். டாக்டரே ட்ரிப்பைக் கொண்டு வந்து பொருத்தினார்.

ஓர் இளம் டாக்டர் கூட வந்தார். நாடியைப் பரிசோதித்து விட்டு, ''இனிமே சரியாயிடும்மா, கவலைப்படாதீங்க'' என்றார் டாக்டர் சங்க ரன். ''இவர்தான் வார்ட் டாக்டர். அப்பப்ப வந்து கவனிச்சுக்குவார்.''

கௌரிக்கு நன்றி பெருக்கெடுத்தது. ''ரொம்ப தாங்க்ஸ்'' என்பதற்குள் துக்கம் தொண்டையை அடைத்தது.

சங்கரனுடன் வார்ட் டாக்டரும் கிளம்பினார். ''இங்கதான் கோடியிலே என் ரூம் இருக்கு. அவசியம்னா கூப்பிடுங்க'' என்றார் சிநேகிதமாக.

ஒரு பெரிய சோர்வும் நிம்மதியும் அவளை ஆட்கொண்டன. என்ன செய்வது என்று தவிக்க வேண்டியதில்லை இப்போது. உடனுக்குடன் கவனிக்க டாக்டர்கள் இருக்கிறார்கள். அருகிலிருந்த நாற்காலியில் அமர்ந்து கண்ணை மூடிக்கொண்டாள். அடித்துப் போட்டது போல் உடம்பு அசத்திற்று. இப்படிப்பட்ட ஒரு திருப்பம் வரும் என்று நேற்று நினைத்திருக்கவில்லை. இதற்கான காரணம் பகவா்னுக்கே வெளிச்சம். நல்லபடியாகி வீடு போய்ச் சேர்ந்தால் போதும். இவருக்கு பதில் சொல்ல வேண்டிய கட்டாயத்துக்கு என்னை ஆளாக்கிடாதே பகவானே. வீடு போய்ச் சேர்ந்து இவ உடம்பைத் தேற்றி, கல்யாணத்துக்கு ஏற்பாடுகள் ஆரம்பிக்கணும். இவ கல்யாணமாகிப் போயிட்டா வீடு எப்படியிருக்கும்....?

சட்டென்று உலுக்கப் பட்டவளாய் அவள் கண்ணைத் திறந்தாள்.

மாலினியின் உடம்பில் ஓர் உதறல் தெரிந்தது. வலிப்பு வந்தது போல் கையும், காலும் இழுத்தன. ட்ரிப் வைத்த ஸலைன் பாட்டில் பயங்கரமாக ஆடிற்று. அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''மாலினி! மாலினி! நர்ஸ்! டாக்டர்!'' அவள் பித்துப் பிடித்தவள் போல் அலறினாள். யாரும் வரவில்லை.

''நர்ஸ் யாரும் கிடையாது. ஸ்டிரைக் ஆச்சே!'' என்றது பக்கத்துப் படுக்கை.

அவள் வெறி பிடித்தது போல் ''டாக்டர், டாக்டர்'' என்று கத்திக்கொண்டு ஓடினாள்.

தேடிப் பிடித்து டாக்டருடன் அவள் திரும்பி வந்தபோது வலிப்பு அடங்கியிருந்தது. கண் மூடிய முகம் தலையணையிலிருந்து கீழிறங்கியிருந்தது.

இளம் டாக்டர் அவசரமாக நாடியைப் பிடித்துப் பார்த்தார். விழிகளைத் திறந்து பார்த்தார். சலைன் பாட்டிலை ஆட்டிப் படைத்தார். ''மை காட்!'' என்று அடிக்குரலில் பிரமித்தார்.

''என்ன டாக்டர் என்ன?'' என்று அவள் பதைத்தாள். பயங்கர அனுமானத்தில் விழிகள் விரிந்தன.

''ஸாரி. ஷி இஸ் டெட். என்னாலே நம்பவே முடியவில்லை'' என்று டாக்டர் ட்ரிப் குழாயை மெல்ல அகற்றினார்.

அநியாயமாய் ஏமாற்றப்பட்டது போல் பதறிப் போயிற்று அவளுக்கு. பெரிய குரலில் அழுகை வெடித்தது.

கிருஷ்ணனுக்குத் தகவல் அனுப்பி அவருக்காகக் காத்திருக்கும் வேளையில் 'அவருக்கு நான் என்ன பதில் சொல்வேன்' என்கிற வார்த்தைகள் தான் பிரமை பிடித்தது போல் திரும்பத் திரும்ப வெளிப்பட்டன.

வாசலில் கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. அவளுக்கு வெலவெலத்துப் போயிற்று. பரிச்சயமான காலடி ஓசை. நெஞ்சில் பதிவது போல. மாலினியின் அறையிலேயே இன்னும் இருந்த சடலத்தின் முன் வந்து குனிந்த முகம் பேயறைந்தாற் போல் இருந்தது. அவருடைய துக்கமும் தன்னுடையதில் சங்கமித்துப் போனது போல் அவள் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ள இயலாமல் அழுதாள். அவள் தோளைப் பற்றி அவர் சமாதானப் படுத்துவார் என்கிற ஓர் அசட்டு எதிர்பார்ப்பில் அவள் காத்திருந்தாள். என்ன விஷயம், எப்படி நேர்ந்தது என்றாவது அவர் கேட்பார் என்று நினைத்தாள். அவர் எதுவும் கேட்கவில்லை. ஓர் இறுக்கமான மௌனத்துடன் அறையை விட்டு வெளியேறினார். வெளியில் துக்கம் விசாரிக்க வந்திருந்த தமது ஆபீஸ் சிப்பந்திகளிடம் என்னவோ பேசினார்.

இரண்டு பெண்கள் உள்ளே நுழைந்தார்கள். அவள் தோளை மெல்லத் தொட்டார்கள்.

''எழுந்திருங்க மிஸஸ் கிருஷ்ணன். உடம்பைக் குளிப்பாட்டி புடைவை கட்டி நடுக் கூடத்துக்கு கொண்டு வரணுமாம். எலெக்ட்ரிக் க்ரிமெட்டோரியத்துக்குப் போறாங்களாமே!''

அடி வயிற்றில் ஏதோ கழன்றது. கண்ணீர் வந்தது. அவள் மெல்ல எழுந்தாள்.

''குளிக்கணும்னு அடம் பிடிச்சியேடி. இப்பக் குளி. இப்பக் குளி. நார்மல் வந்துடுத்து!'' அரற்றியபடி காரியங்கள் செய்தாள்.

சாவு வந்தது போலவே அடக்கமும் அவசரமாக நடந்தது. உடலை வேனுக்குள் வைத்து கிருஷ்ணன் கிளம்பிப் போனார். தங்களுக்குத் தோன்றிய விதத்தில் சமாதானம் சொல்லி, வந்திருந்த கூட்டம் கிளம்பிச் சென்றது.

திடீரென்று வெறுமை சூழ்ந்த திகைப்பில் அவள் அமர்ந் திருந்தாள். மாலினி இல்லாமல் இந்த வீடு எப்படியிருக்கும்? அம்மா அம்மாவென்று அவளுடைய நிலையை உறுதிப்படுத்தும் குரலின் முக்கியத்துவம் இப்பொழுது தான் புரிந்தது போல் அவளுக்குத் துக்கமேற்பட்டது.

தூக்கிவாரிப் போட, அவள் நிமிர்ந்தாள். கிருஷ்ணன் எதிரில் நாற்காலியில் அமர்ந்திருந்தார். கப்பென்று ஒரு பயம் கவ்வியது. இந்தப் பயம் காரணம் புரியாமலே அவளுள் அங்கமாகிப் போன ஒன்றாக-

''உங்களுக்குக் கொடுத்த வாக்கை என்னாலே காப்பாத்த முடியலே'' என்ற இயலாமையுடன் அழுகையாக வெடித்தது.

''திடீர்னு வாந்தி எப்படி வந்தது?''

''தெரியலியே!'' என்றாள் பலஹீனமாக. ''ரசஞ்சாதம் தான் கரைச்சுக் கொடுத்தேன். பிடிச்சுத் தான் சாப்பிட்டா.''

அவர் கூர்மையாக அவளைப் பார்த்தார்.

''அதோட என்ன கொடுத்தே?''

குரலிருந்த கடுமையைக் கண்டு அவளுக்கு நடுக்கமேற்பட்டது.

''சிப்ஸ் கேட்டாள்னு ரெண்டே ரெண்டு வில்லை...''

''பஜ்ஜி கேட்டான்னா கொடுத்திருப்பியா?''

அவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

''இரண்டு சிப்ஸ்னாலே அப்படி ஒரு வாந்தி வருமா?''

''அதுதான் எனக்கும் புரியலே'' என்றாள் அவள் குழப்பத்துடன். ''ஆபரேஷன் கேஸ் இருந்ததாலே டாக்டருக்கும் வந்து பார்க்க முடியலே. பயப்படாதீங்கறார். நான் என்ன செய்வேன்?''

''டாக்டர் சொன்ன மருந்தை ஒழுங்கா கொடுத்தியா?''

இதென்ன குறுக்க விசாரணை என்கிற ஆயாசத்துடன் அவள் பார்த்தாள்.

''சொன்னபடிதான் கொடுத்தேன். மருந்து வாங்கக் கூட ஆளில்லாமல் கதவைப் பூட்டிண்டு கடைக்கு ஓடியிருக்கேன்.''

''மருந்து வாங்கின ரசீதை வெச்சிருக்கியா இல்லே. சில்லறைக்குக் கீழே கொட்டின மாதிரி அதையும் எங்கேயாவது நழுவ விட்டியா?''

அவள் அதிர்ந்து அவரைப் பார்த்தாள். துப்புத் துலக்கி விட்டுத்தான் இந்த விசாரணை. குபீரென்று துக்கமும் அவமானமும் திமிறிக் கொண்டு எழுந்தன. அவள் பிரயாசையுடன் உள்ளே சென்று கைப்பையிலிருந்த ரசீதைக் கொண்டு வந்து காண்பித்தாள். அதை அவர் மேலோட்டமாகப் பார்த்து,

''மருந்தை வாங்கினா போதுமா? ஒழுங்காக் கொடுத்தாத்தான் அதுக்குப் பலன் இருக்கும்'' என்றார்.

அவளுக்குப் பொறுமை நழுவிற்று.

''அத்தனை பொறுப்பில்லையா எனக்கு?''

''பொறுப்பிருந்தா வேலைக்காரி காலையில் வந்து கதவைத் தட்டற வரைக்கும் தூங்கிண்டிருந்திருப்பியா? பெத்தவளுக்குக் கண்ணை மூடத் தோணுமா?''

அவள் சுளீரென்று அவரை ஏறிட்டுப் பார்த்தாள். இந்த மனுஷனின் நரம்பில் ஓடுவது இரத்தமாக இருக்க முடியாது என்று தோன்றிற்று. பகபகவென்று வெள்ளமாய் இருபது வருஷத்து நினைவுகள் மூச்சை முட்டின. இவருக்கும் தனக்குமிடையே இத்தனை காலமாக ஒட்டிக் கொண்டிருந்த உறவு நூலிழைதான் என்கிற பிரக்ஞையே அவளது பயத்தின் வித்து என்று இப்பொழுது புரிந்தது.

''எனக்குத் தெரியாது. நான் மாலினியைப் பெறல்லைதான்'' என்றாள் அவள் புதிதான தைரியத்துடன். ''அவளைப் பெத்திருந்தா ஒருவேளை அவ செத்திருக்கமாட்டா. டாக்டர் உடனே வந்திருப்பார். ஆஸ்பத்திரியிலே ஸ்டிரைக் இருந்திருக்காது. ட்ரிப் கொடுத்ததுக் கோளாறாயிருக்காது....''

''திமிரா....?''

அவள் கையமர்த்தித் தொடர்ந்தாள்.

''எனக்குக் குழந்தை பிறந்தா மூத்தாள் குழந்தையை நான் சரியாக் கவனிக்க மாட்டேன் என்கிற சந்தேகத்தில் நீங்க எங்கிட்டச் சொல்லாமலேயே ஆபரேஷன் பண்ணிக்க வேண்டியிருந்திருக்காது.''

அவர் பதிலே சொல்லாமல் இறுக்கத்துடன் அமர்ந்திருந்தார்.

அவள் சோர்வுடன் எழுந்தாள். ஒரு ஜன்மத்தை விரயம் செய்தது போல் இருந்தது. இந்த மனிதனின் நன்மதிப்பைப் பெறவேண்டும் என்று சதா சர்வகாலமும் பட்ட கவலையும் தாங்கிக் கொண்ட அவமானமும் இன்று மாலினியின் உடம்போடு மின்சாரத்தில் பஸ்பமாகிவிட்டதாகத் தோன்றிற்று.

பஸ்மத்திலும் ஏதும் ஜனிக்குமா? துளிர்க்குமா?
ஜனித்தது.

''இனிமே உனக்கு இங்கே வேலையில்லேன்னு நீங்க சீட்டுக் கிழிக்க வேண்டியதில்லே. நானே கிளம்பறேன்'' என்று துளிர்த்துக் கொண்டு கிளம்பிற்று.

கல்கி 1990

